# தலபுராணம் என்னும் கருவூலம்-4

*July 31, 2010*

**- முனைவர் கோ.ந. முத்துக்குமாரசுவாமி**

முந்தைய பகுதிகள்:

- தலபுராணம் என்னும் கருவூலம் – 1
- தலபுராணம் என்னும் கருவூலம் – 2
- தலபுராணம் என்னும் கருவூலம் – 3

**காஞ்சிப் புராணம் – வேதக் கருவூலம்** *(தொடர்ச்சி…)*

**நிலையாமைக் கோட்பாடு X உலகியற் கடமை – ஒரு சிந்தனை**

புறநானூற்றுப் புலவர்கள் வெறும் காதலையும் போரையும் மட்டுமே சிந்தித்து முடிந்துவிடவில்லை. அவர்களிற் சிலர் வாழ்க்கையின் இயல்புகளையும் சிந்தித்தனர்; வாழ்க்கையின் குறிக்கோள், பயன் குறித்தும் சிந்தித்தனர். வாழ்க்கையின் முடிபும் பயனும் தெளிவாகத் தெரிந்த பின்னும் அவற்றை ஒருவர் அடையவிடாமல் சிலசக்திகள் தடைசெய்வதையும் கண்டனர். அவ்வாறு உலகின் உண்மை இயல்பைக் கண்டறிந்தவர்களில் ஒருவர், ஓரேருழவர் என்னும் பெயருடைய புலவர்.

புறநானூற்றில் ஓரேருழவரின் பாட்டு மிகச்சிறியது; நான்கே அடிகளைக் கொண்டது. ஆனால் மிகப்பெரிய சிந்தனைகளைத் தன்பால் அடக்கிய பாடலது.

அப்பாடல்:

“அதளெறிந் தன்ன நெடுவெண் களரின்
ஒருவன் ஆட்டும் புல்வாய் போல
ஓடி யுய்தலுங் கூடுமன்
ஒக்கல் வாழ்க்கை தட்குமா காலே”

இப்பாடல் பொருண்மொழிக் காஞ்சி என்னும் துறையில் அமைந்தது.



வாழ்க்கையின் இயல்புகளை நன்கு தெரிந்த தவமுனிவர் ஒருவர் தாம் தெளிந்ததுவும், உயிருக்கு இம்மை மறுமைகளில் உறுதி தருகின்றதுமாகிய பொருளை ஒருவர்க்குக் கூறுவதே, “பொருண்மொழிக் காஞ்சி” என்னும் இத்துறைக்குப் பொருளாகும்.

தொல்காப்பியம் காஞ்சி என்னும் துறையின் பொது இலக்கணத்தைப்,

“பாங்கரும் சிறப்பின் பல்லாற் றானும்
நில்லா வுலகம் புல்லிய நெறித்தே” (புறத்திணையியல் 23)

என்று கூறுகின்றது.

(பாங்கு – துணை. சிறப்பு என்பது வீடுபேறு. “**சிறப்பீனும் செல்வமும் ஈனும்**”- குறள் 31, பரிமேலழகர் உரை).

வீட்டின்பம் தனக்கு நிகர் இல்லாதது. நிலையான வீட்டின்பம் ஏதுவாக நோக்கின், உலகியலிற் காணப்படும் உயிர், உடல், இளமை, செல்வம் யாவையும் நிலையாமையை உடையன, வீட்டின்பம் ஒன்றைத் தவிர வேறு ஒன்றும் நிலையாது என்பது இந்த நூற்பாவின் கருத்து.

நில்லாத உலகியல்பு கண்டு நிலைத்த வீட்டின்பத்தை அடைய உணர்த்துவதே ஞானம். இந்த ஞானத்தை அனுபவத்தின் வாயிலாக அடைந்தவருக்கும் வீட்டின்பமாகிய குறிக்கோளை நோக்கிச் செல்ல இயலாதவாறு உலகியல் கடமைகள் குறுக்கே நிற்கும். இத்தகைய மனநிலையில் இருந்த *ஒரேருழவர்* எனும் இச் சங்கப்புலவர் இப்பாடலைப் பாடினார்.

'தோலைப் புடைத்து வைத்தாற் போன்ற நெடிய வெளிய களர் நிலத்தின்கண் ஒருவன் அலைக்கும் (துரத்தி வருத்தும்) புல்வாய் (மான்) எளிதின் ஓடிப் பிழைக்குமா போல யானும் நன்னெறிக்கண்ணே ஒழுகிப் பிழைக்கவுங் கூடும்; சுற்றத்தோடு கூடி வாழும் இல்வாழ்க்கை அதன்கட் செல்லவொட்டாது காலைத் தளையா நிற்கும்; ஆதலான் உய்தல் இயலாது.'

இந்தப் பாடலில் கவிஞனின் உள்ளம் ஞானவாழ்க்கை உலகவாழ்க்கை இரண்டனுக்கும் இடையில் சிக்கித் தவித்தல் நன்கு வெளிப்படுகின்றது.



இதுபோன்ற மனப்போராட்டம் அருச்சனனுக்கும் நிகழ்கின்றது.

போர்க்களத்தில் நடைபெற்ற இந்தப் போராட்டத்தில் அருச்சுனனின் உள்ளம் முதலில் ஞானமார்க்கத்தையே தெரிவு செய்கின்றது. பகைவர் எனப்பட்டுத் தன்னொடு போருக்கு வந்துள்ளவர்களைக் கண்ட அருச்சுனன் அவர்களெல்லாம் தன் சுற்றத்தார்களாக இருத்தலைக் காண்கிறான். சுற்றத்தார்களைக் கொன்று அழித்து அடையும் இராச்சியத்தை அவன் விரும்பவில்லை.

சத்துருக்களாகத் தோன்றினாரெல்லம் என்னுடைய மித்ருக்களாக இருப்பதால், இவர்களைக் கூரிய அம்பாலே கொன்று இராச்சியம் செய்வதில்லையென்று சொன்ன அருச்சுனன் பெற்ற ஞானம் உயர்ந்தஞானம் என்றும், அவனுக்குத் தேர்ப்பாகனாகிய கிருஷ்ணன் அவன் மனந் தேறிடச் (மயங்கிட?) 'சர்வமும் நாமே கொல்வோம் நீ யன்று' என்று அவனைச் சுற்றத்தாரைக் கொல்விக்க ஊக்கினான் என்றும் சிவஞான சித்தியார் பரபக்கம் ஒரு கருத்தைக் கூறிற்று.

("பார்த்தனார் இரதமேறிப் படைதனைப் பார்த்துச் சார்பைக், கூர்த்த அம்பாலே எய்து கொன்றர சாளே னென்னத், தேர்த்தனி லிருந்து மாயை செய்துமால் கொல்லச் செப்பும், வார்த்தை'யே பகவத்கீதை என்று கூறுகின்றது சிவஞானசித்தியார் பரபக்கம்.)

பல்லாயிரம் பேரைக் கொன்று அசோகன் பெற்ற ஞானத்தை அருச்சுனன் யாரையும் கொல்லாமலே பெற்றான். "நில்லா தவற்றை நிலையின என்றுணரும், புல்லறி வாண்மை கடை" (331) எனத் தெய்வப் புலவர் கூறியவாறு, நிலையில்லாத இராச்சிய செல்வத்தை விரும்பி, நிலையான பழியைத் தேட அருச்சுனன் விரும்பவில்லை. இதுவே அவன் பெற்ற ஞானம். இத்தகையதொரு ஞானமே அரக்க குலத்தினனான வீடணனை, விபீஷ்ண ஆழ்வாராக்கியது.

இந்த நிலைமையின் மறுபக்கத்தையும் சிந்திக்க வேண்டும். ஒருக்கால், அருச்சுனன் போர்செய்ய மறுத்திருந்தால், அவனை, உலகம் ஞானி என்று கூறுமா, போருக்கு அஞ்சிய கோழை என்று இகழுமா, கடமையில் தவறியவன் எனப் பழிக்குமா?

இத்தகைய சிக்கல் இராமபிரான் வாழ்க்கையிலும் நேர்ந்தது எனக் காஞ்சிப் புராணம் வீரராகவப் படலம் ஒரு கதையைக் கூறுகின்றது.

(இங்கு இராமபிரான் என்றது, குலசேகர ஆழ்வாரும் கம்பனும் தியாகையரும் போற்றிய இராமன் என்னும் பெயருடைய பரம்பொருளை அன்று. இங்கு இராமன் என்றது அயோத்தி என்ற நாட்டுக்கு உரியவனும், இலங்கை என்ற நாட்டை ஆண்ட இராவணன் என்னும் பகைவன் மீது படையெடுத்துச் சென்றவனுமாகிய ஓரரசனை.)

சீதாபிராட்டியை இராவணன் கவர்ந்து சென்றபின், இராமபிரான் அவளைத் தேடி அலைகின்றான். காஞ்சியம்பதியை அடைகின்றான். திருவேகம்பநாதரைத் துதித்துச் சீதையைப் பெற அருளவேண்டுகின்றான்.

திருவேகம்பரின் சந்நிதிக்குத் தெற்கே அமைந்துள்ள அகத்தீசுரத்திற்குச் சென்றான். அங்கு மலயமாமுனியைக் கண்டு வீழ்ந்து வணங்கினான். கவலையில் தோய்ந்துள்ள இராமனின் முகத்தைக் கண்டு, அகத்தியர் கவலைக்குக் காரணத்தை வினவுகின்றார். இராமன் நடந்த தனைத்தையும் கூறினான்.



மனைவியைப் பிரிந்திருந்த கவலையில் மூழ்கி இருந்த இராமனுக்கு அகத்திய முனிவர் உலகத்தின் நிலையாமை, உலகு உடல்கள் ஐம்பூதங்களாகிய சடத்தின் கலப்பினால் உருவானவை, பஞ்சபூதக் கூட்டரவால் எல்லாப் பொருள்களும் உருவானவையால் யாவும் உடன்பிறந்தவை, இருவினைப் பயனால் இன்பத்துன்பங்கள் தோன்றுகின்றன என்றெல்லாம் தத்துவ உபதேசம் செய்கின்றார். (ஆதி சங்கரரின் 'நிர்வாண ஷட்கம்' என்னும் தோத்திரநூலின் பொருளும் இது போன்ற உபதேசமே.)

இராமபிரான் அவற்றைக் கேட்கும் மனநிலையில் இல்லை. இராமபிரான் அகத்திய முனிவருக்குக் கூறிய மறுமொழி சிந்திக்கத் தக்கது.

"முனிவர் பிரானே! தாங்கள் கூறியது அனைத்தும் உண்மையே. இருந்தாலும் இப்பொழுது இது பொருந்துமோ? மனையவள் மாற்றான் கை அகப்பட்டு வருந்தும்போது நிலையாமை முதலிய தத்துவம் பேசிச் செயலற்று இருப்பவனைப் பித்தன் என்று உலகம் உரைத்திடும். ஆதலினால், பெரியோய்!, போர்க்களத்தில் பகைவரின் உயிரைப் பருகி வென்று, என் உயிரிற் சிறந்த சீதையை மீட்டபின், ஐயனே! நீ தெரிவிக்கும் நுண்ணிய தத்துவஞானத்துக்கு உரியவன் ஆவேன். நான் சொன்னவாறல்லாமல் என்னுளம் அடங்கிடாது" என உறுதிபடச் சொன்னான்.

"அத்த நின்னுரை முழுவதும் உண்மையே யானும்
இத்த லைக்கிது இணங்குமோ மனையவள் மாற்றான்
கைத்த லகப்பட்டுழித் தத்துவங் காண்போன்
பித்தன் என்றுல குரைத்திடும் ஆதலிற் பெரியோய்
பறந்த லைப்புகுந் தொன்னலர்ச் செகுத்துயிர் பருகிச்
சிறந்த சீதையை மீட்டபின் ஐயநீ தெரிக்கும்
உறந்த தத்துவ ஞானத்துக்கு உரியவன் ஆவேன்
அறைந்த வாறலது என்னுளம் அடங்கிடாது என்றனன்"



இராமனின் மனநிலையை அறிந்த அகத்தியர்,

"உன் கருத்து இதுவென்றால், நீ போரில் வெற்றி பெறும் வீரத்தை விரும்பியதால், '*வீரராகவேசன்*' என்னும் பெயரால் ஒரு இலிங்கம் நிறுவி இக்காஞ்சியில் இறைவனை வழிபடுக.

இராவணனைச் சிறுவிரலா லடர்த்த இறைவன் உனக்கு அவனை வெல்லும் வல்லமை அளிப்பான்"

எனக் கூற, இராமன் அவ்வாறு வழிபட்டுப் பயன்பெற்றான் என்பது பின் நிகழ்ந்த கதை.

'நிலையாமை' என்னும் தத்துவக் கோட்பாடு இந்தியத் தத்துவ ஞானங்களில் எல்லாம் பேசப்படுவதொன்றே.

வாழ்க்கையின் ஏற்ற இறக்கங்களில் அடிபட்டு புண்பட்டுத் துன்பப்படும் நெஞ்சுக்கு இதமான மருந்து நிலையாமையைத் தெளிதல் அன்றி வேறொன்றும் இல்லை.

நிலையாமையே உண்மை எனினும் இந்தத் தத்துவம் எல்லோருக்கும் உரியதன்று. அதற்குரிய தீவிரதர மனப் பக்குவம் உடையவருக்கே இந்தத் தத்துவத்தின் பொருள் விளங்கும். அத்தகைய தீவிரதர மனப்பக்குவம் இல்லாதவருக்கு இந்த தத்துவத்தைக் கூறல் கேலிக் கூத்தாகிவிடும். அருச்சுனனையும் இராமனையும் போல உலகியற் கடமைகளைக் குறைவறச் செய்து முடித்தலே பிற அனைவருக்கும் உரியதாகும்.

தமிழரை அவமதித்த கனகவிசயரை வென்று, பத்தினித்தெய்வம் அமைக்கக் கற்கொண்டு வந்து, தன் உலகியல் கடமைகளை முடித்திருந்தான் சேரன் செங்குட்டுவன். அவன் மீது பொறாமை கொண்டிருந்த ஏனைத் தமிழ் மன்னர்கள் இருவரும் சேரன் செங்குட்டுவனின் வெற்றியை இழித்து உரைக்க, அவர்கள் இருவரையும் ஒறுக்கச் சீற்றம்கொண்டான். அப்பொழுது மாடலமறையோன் எழுந்து ‘பொருண்மொழிக்காஞ்சி’ யாகச் சேரனுக்கு அறவுரை வழங்குகின்றான்.

முதலில் சேரன் செங்குட்டுவன் பெற்ற மகத்தான வெற்றிகளையெல்லாம் கூறி, அவன் மனம் அமைதி கொள்ளும்படியாகப் புகழ்கின்றான்.

அதன் பின், அரசே! நீ வையகம் காவல் பூண்டு ஆண்டுகள் ஐயைந்திரட்டிச் சென்றன. நீ அறக்களவேள்வி செய்யாமல் மறக்கள வேள்வியே செய்வோனாக உள்ளாய். உன் முன்னோரில், ‘கடற்கடம் பெறிந்த காவலனாயினும், விடர்ச்சிலை பொறித்த விறலோனாயினும் (இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன்), பாலை பாடிய கௌதமனாரின் செய்யுளைக்கொண்டு அவரையும் அவருடைய மனைவியையும் மேனிலையுலகம் எய்துவித்தவனாயினும் (பல்யானைச் செல்கெழு குட்டுவன்) இன்னுமிவர்போன்ற மீக்கூற்றாளர்கள், பெருவீரர்கள் யாவரும் இப்பொழுது இல்லை. இதனால் யாக்கை நில்லாது என்பதை உணர்ந்தோய்.

செல்வம் நில்லாது என்பதை நீ வெற்றி கொண்ட தண்டமிழ் இகழ்ந்த ஆரியமன்னரிற் கண்டனை அல்லவா. இளமை நில்லாதென்பதை உன்னுடைய யாக்கையில் நீயே கண்டனை. ஒருவன் செய்வினை வழியில் ஆருயிர் சென்று பிறக்குமென்பது பொய்யில் காட்சியோர் பொருளுரையாகும். பிறந்திறப்போரெல்லாரும் போகும் பொதுநெறியில் உன் உயிர்போதலை யான் பொறேன். அறிவெல்லை கடந்தவனே! நீ வானவர் போற்றும் வழியாகிய வீட்டுநெறியில் செல்லல் வேண்டும்”



என்று நிலையாமையை உணர்த்தி ஞானமார்க்கத்தைக் காட்டி மாடல மறையோன் செங்குட்டுவனை ஆற்றுப்படுத்தினான்.

சேரன் செங்குட்டுவன் சினந்தணிந்து, ஆரிய அரசரைச் சிறைவீடு செய்கிறான்; நன்பெருவேள்வி முடித்தான்.

அருச்சுனன், இராமன், சேரன் செங்குட்டுவன் இம்மூவரின் மனநிலையை ஒப்பு நோக்கினால் எத்தகைய மனநிலை, நிலையாமை என்னுமுயரிய கோட்பாட்டை ஏற்கும் பக்குவமுடையதாகும் என்பது தெளிவாகும்.

நிலையாமை என்ற தத்துவத்துக்கும், தனிப்பட்ட வாழ்க்கையில் ஒருவன் கைக்கொண்டு ஒழுகுவதற்கும், நாடாட்சி போன்ற பொது வாழ்க்கையில் உலகியல் கடமைகளை ஒருவன் கட்டாயம் கடைப்பிடித்து ஒழுகுவதற்கும் உரிய எல்லைகளை வேதமதம் கற்பிக்கின்றது.

வேதமதத்தை எதிர்த்து, ‘நிலையாமையே நிலையானது’ என்ற கொள்கையை இறுக்கமாகப் பிடித்துக் கொண்ட மதங்கள் பாரத நாட்டுக்கு அந்நியமாகப் போயின.

**குறிச்சொற்கள்:** அருச்சுனன், உலகவாழ்க்கை, உலகியற் கடமை, கருவூலம், காஞ்சிப்புராணம், சங்கப்புலவர், ஞானவாழ்க்கை, தலபுராணம், நிலையாமைக் கோட்பாடு, புறநானூறு, பொருண்மொழிக் காஞ்சி, மனப்பக்குவம், மனப்போராட்டம், முக்தி, வாழ்க்கையின் இயல்பு, வாழ்க்கையின் குறிக்கோள், வீடுபேறு, வீட்டின்பம்